# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 7 | இதழ் 10 | பிப்ரவரி 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 7 | Issue 10 | February 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



## பிரவாகத்தின் அவசியம் எங்கு தேவை ?



அனுபவங்களின் முதற் பகுதிக்குப் பிரவாகம் தேவையில்லை.
ஏனெனில் இயற்கையாகவே அங்கு பிரவாகமாகவே இருக்கிறது.
அனுபவங்களின் இரண்டாம் பகுதியான அறிந்த பகுதியில் தான் பிரவாகம் தேவைப்படுகிறது.
ஆனால் அங்கும்கூட பிரவாகத்தை முயன்று கொண்டுவரத் தேவையில்லை.
அக உணர்ச்சிகளைச் சீரமைக்கத் தேவையில்லை என்பதைப் புரிந்துகொண்டால் மட்டுமே போதும்.

- ஸ்ரீ பகவத்



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# ஆசிரியர் பகுதி

**ஞானியர் அனைவருக்கும் இந்த சக–பயணியின் வணக்கம்.**

இயற்கையை மதிப்போம்; இயற்கையை வாழ்வின் வளமாக்குவோம்.

நமது அறிவு இயற்கையைப் புரிந்துகொண்டு அதனை நமது வாழ்வின் வளமாக மாற்றி பயன்படுத்துவதற்குதானே தவிர அதனில் குறிக்கிடுவதற்கல்ல.

குறையுள்ள அறிவே இயற்கையோடு போராடும். முழுமையான அறிவு எப்போதும் இயற்கையோடு இசைந்தே செயல்படும்.

இயற்கையைக் காப்போம் என்பது கூட பிதற்றல்தான். இயற்கைதான் நம்மை காத்துக் கொண்டிருக்கிறது. அது எப்போதும் தன்னையும் காத்துக்கொள்ளும்; தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும்.

இயற்கையோடு முரண்படுவதுதான் நம்மை நாமே அழித்துக் கொள்வதாகும்.

**மண்ணும் மரமும் மட்டுமல்ல நமது மனமும் இயற்கைதான்.**

மனதின் இயற்கையான இயக்கத்தைப் புரிந்து கொண்டால் நாமும் அதனோடு முரண்படமாட்டோம். அதனை மாற்றியமைக்கப் போராடமாட்டோம். மனதோடு முரண்படுவது என்பது நம்மை நாமே மாய்த்துக் கொள்வதே ஆகும். மனிதனும் இயற்கையின் ஒரு பகுதிதான். அதனோடு முரண்படும்போது துண்டுபட்டு துன்பம் அடைகிறான். அறிவும் மனதின் ஒரு பகுதிதான். மனதோடு அறிவு முரண்படும்போது அதுவே துன்பத்தையும் துயரத்தையும் கொண்டுவருகிறது. அறிவு புறச் செயலுக்குதானே தவிர மனதை நிர்வாகம் செய்ய அல்ல. அறிவு தனது எல்லையையும் இயலாமையையும் புரிந்து கொள்வதைத்தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம். இயற்கையைப் புரிந்து கொண்டு அதனோடு குறுக்கிடாமல் அதனை வாழ்வின் வளமாக மாற்றுவதைப் போல்,

மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளை பயன்படுத்தி அவற்றை வாழ்வின் வளங்களாக மாற்றும் அறிவே ஞானம்.

இம்மாத இதழில் வந்துள்ள ஐயாவின் **பிரவாகத்தின் அவசியம் எங்கு தேவை ?** என்ற கட்டுரை மிகவும் எளிதாகவும் ஆழமாகவும் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளது.

மேலும் ஐயாவின் **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்னும் நூல் ஆன்மிகத்தில் பரிச்சயம் இல்லாதவர்களைக் கூட ஞானத்திற்கு அழைத்துச் செல்லும் நூல். இந்நூல் கல்லூரிகளில் பாடப் புத்தகமாக அமைய வேண்டும் என்பது ஐயாவின் விருப்பம். அப்படி அமையும்போது வருங்கால சமுதாயமே வளமான சமுதாயமாக மாறிவிடும்.

மேலும் ஐயாவின் புதிய நூலான **புதிய உலகம் படைப்போம்** எனும் நூல் ஜனவரி மாதம் 20 ஆம் தேதி வெளியிடப்பட்டது. உலகை நல்லவிதமாக மாற்றும் சாத்தியச் சிந்தனைகளை வழங்கும் இப்புத்தகத்தை சமுதாயத்தின் மீது அக்கறை உள்ள நாம் அனைவருமே படித்து மற்றவர்களிடமும் கொண்டு சேர்க்க வேண்டிய நூலாகும்.

மனித குலத்தின் துன்பத்தையும் துயரத்தையும் போக்கும் ஞானத்தை உலகெங்கும் கொண்டு செல்வோம். புதிய உலகத்தைப் படைப்போம்.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075





# பிரவாகத்தின் அவசியம் எங்கு தேவை ?

- ஸ்ரீ பகவத்

விடுதலை அல்லது முக்தியை, நாம் பிரவாகம் என்ற பெயரில் அழைத்து வருகிறோம்.

Flowing என்றும் பிரவாகம் என்றும் இதனைக் குறிப்பிட்டு வருகிறோம்.

நமது கருத்துகளில் பரிச்சயமானவர்களுக்கு ”பிரவாகம் ”என்ற சொல் மிகவும் பழகிப் போய்விட்டது.

”அனைத்தையும் பிரவாகமாக விட்டுவிட வேண்டும்”

”அனைத்தும் பிரவாகமாகப் போய்க்கொண்டு இருக்கிறது”

-இவ்வாறு சர்வசாதாரணமாக அனைவரும் இந்த வார்த்தையைப் பயன்படுத்தி வருகிறார்கள்.

பிரவாகம் – விடுதலை என்ற அம்சந்தான் நம் ஒவ்வொருவரது வாழ்விலும் பிரதானமான அம்சமாகும்.

ஆகவே இந்தப் பிரவாகத்தின் செயல்பாட்டையும், நுட்பத்தையும் நாம் தெளிவாகப் புரிந்துகொண்டு விட்டோமா என்பதை நாம் உறுதி செய்து கொள்ளவேண்டுவதும் மிகவும் அவசியமே.

மனித வாழ்வின் உயர்ந்த இலக்காக முக்தி – விடுதலை-பிரவாகம் என்பதாகவே

ஆன்மிக தத்துவ நூல்கள் அனைத்தும் ஏகோபித்துக் கூறிவருகின்றன.

இந்த விடுதலை என்பது, நமது வாழ்வில் நாம் அடைய வேண்டிய இறுதி நிலை என்பதைப் போன்று கூறப்பட்டிருந்தாலுங்கூட,

– அந்தப் பொருளிலேயே நாம் புரிந்து கொண்டிருந்தாலுங்கூட, இது நமது கடைசிப் புகலிடம் அல்ல.

நமது வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் இந்த விடுதலையின் தேவை – பிரவாகத்தின் பங்கு உள்ளது.

இந்த விடுதலையை – பிரவாகத்தை நாம் முயன்றுதான் அடைய வேண்டுமா?

இது நாம் அடைய வேண்டிய ஒரு நிலையன்று. இது நமது இயற்கையான நிலையே ஆகும்.

ஆகவே நாம் முயன்று இதனை அடையத்தேவையில்லை.

இந்தப் பிரவாகம் அகத்தைச் சார்ந்ததா அல்லது புறத்தைச் சார்ந்ததா?

இது புறத்தையோ, புறச் செயல்களையோ குறிப்பிடவில்லை.

இது அகத்தை மட்டுமே குறிப்பிடுகிறது. – அக அனுபவங்களை மட்டுமே குறிப்பிடுகிறது.

நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது; பயம் ஏற்படுகிறது; கவலை ஏற்படுகிறது.

– இவை அனைத்தும் மனதின் அனுபவங்களாகும்.

– அகத்தில் ஏற்படும் அனுபவங்களாகும்.

இத்தகைய அனுபவங்களுள் ஓர் அனுபவமாக வருவதல்ல இந்தப் பிரவாகம்.

அனுபவங்கள் அனைத்தும், நமது மனது எடுத்துக் கொள்ளும் ஒரு தற்காலிகமான வடிவமே.

சில கணங்களுக்கு நம் மனமே அந்த அனுபவமாக வடிவெடுத்துக் கொள்கிறது.

அப்படிப்பட்ட அனுபவங்களுள் ஒரு வினோதமான அனுபவமாக வடிவெடுத்துக் கொள்வது இந்தப் பிரவாகம் அல்ல.

மனது எடுத்துக் கொள்ளும் ஒரு வினோதமான வடிவமல்ல இந்தப் பிரவாகம்.

நம் மனதானது அப்படித் தற்காலிகமாக எடுத்துக்கொண்ட வடிவத்திலிருந்து விடுபட்டு

தனது வடிவமற்ற சுய நிலைக்குத் திரும்புவதுதான்

– இந்தப் பிரவாகமாகும்.

– நம் மனதானது,

தனது வடிவமற்ற சுயமான நிலையை எப்போதுமே நிரந்தரமாகப் பிடித்து வைத்துக்கொள்ள வேண்டுமா?

அப்படிப் பிடித்து வைக்கத் தேவையில்லை.

ஏனெனில் மனதின் சுயநிலையென்பது ஒரு நிலையே அல்ல.

மனதில் அனுபவங்கள் ஏற்படும் போது அவற்றைதான் ஒரு நிலையென்றே கூறமுடியும்.

மனதில் ஏற்படும் எந்த ஒரு நிலையையும் பிடித்து வைத்துக் கொள்ளாமல் இருப்பதுதான் மனதினுடைய சுய நிலையாகும்.

மனதில் ஏற்படும் அனுபவங்கள் அனைத்தும் எப்படித் தாமாகத் தோன்றினவோ அப்படியே, அவை மறுகணமே

– தாமாகவும் மறைந்துவிடும். அப்படி தோன்றுவதையெல்லாம் அனுபவம் என்று கூறுகிறோம்.

அப்படி மறைவதை மட்டுமே விடுபடுதல் – விடுதலை – பிரவாகம் என்று கூறுகிறோம்.

இரண்டுமே இயற்கையானவைதாம்.

தாமாகவே தோன்றுகின்றன; தாமாகவே மறைகின்றன.

தோன்றுவதிலும் தவறு கிடையாது; மறைவதிலும் தவறு கிடையாது.

பிறகு, எங்குதான் பிரச்சினை ஏற்படுகிறது?

ஆற்றுநீர் சீராக ஓடி நகர்ந்து செல்வதைப் போல்

நமது அனுபவங்களும் சீராக ஓடி மறைந்து விட்டால் பிரச்சினை கிடையாது.

ஆற்று நீரானது எங்கேயாவது சில இடங்களில் ஏற்படும் தடங்கல்களின் காரணமாக

நீர்ச்சுழல்களைக் கூட ஏற்படுத்தி விடுகின்றது.

இப்படி நமது மன அனுபவங்களுங்கூட சீராக ஓடி மறைவதை விட்டுவிட்டு

சில நேரங்களில் சுழலாக மாறி, தம்மை நிலைப் படுத்திக் கொள்கின்றன.

– தக்கவைத்துக் கொள்கின்றன.

– பிடித்து வைத்துக் கொள்கின்றன.

இதுதான் பந்தம் என்று விவரிக்கப்படுகிறது.

இத்தகைய பந்தங்கள் – பிடிப்புகள் நீங்குவதைத்தான் முக்தி என்று கூறுகிறோம்.

– விடுதலை, பிரவாகம் என்று கூறுகின்றோம்.

நமது மன அனுபவங்களின் செயல்பாடுகள் இவ்வாறுதான் அமைந்துள்ளன.

இதனை நாம் இன்னுமொரு கோணத்திலும் பார்த்திடுவோம்.

ஏதாவது ஒரு சூழ்நிலையில் அந்த சூழ்நிலையின் காரணமாக

நமக்கு மகிழ்ச்சியோ அல்லது வருத்தமோ ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம்.

இவையெல்லாம் மனோ அனுபவங்களே.

இவை எப்படி ஏற்பட்டன?

நாமாக உருவாக்கினோமா?

நாம் அவற்றை உருவாக்கவில்லை.

நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கு, ஏற்ப அவையாகவே நமக்குள் ஏற்பட்டுள்ளன.

அவை அவ்வாறு ஏற்பட்ட பிறகுதான் அவை வந்ததே நமக்குத் தெரியும்.

அவை ஏற்படும் போது அவை யாவும் ”அறியா அனுபவங்களாக” இருக்கின்றன.

அறியா அனுபவங்களாகத் தோன்றிய அவை யாவும் மறுகணமே

”அறிந்த அனுபவங்களாக” மாறுதலடைகின்றன.

அனுபவத்தின் முதற்பகுதி ”அறியா அனுபவம்” – ”Unconscious Experience”.

அனுபவத்தின் இரண்டாவது பகுதி ”அறிந்த அனுபவம்” – ”Conscious Experience”.

அறியா அனுபவம் மறைந்த நிலையில் தான் அறிந்த அனுபவம் உருவாகிறது.

அறியா அனுபவத்தின் ஆயுள், வெறும் கணப்பொழுது மட்டுமே.

அறியா அனுபவத்தையும், பிரவாகத்தையும் பிரிக்கமுடியாது.

அது ஏற்பட்ட கணத்திலேயே பிரவாகமாகி மறைந்துவிடுகிறது.

அப்படி மறையும்போதுதான் அது அறிந்த அனுபவமாக வடிவெடுக்கிறது.

முதற்பகுதி செயல்படும் போது அங்கு அனுபவம் மட்டுமே உள்ளது. அங்கு அறிவு எதுவுமே கிடையாது.

இரண்டாவது பகுதி செயல்படும் போதுதான் அங்கு அறிவு பங்கு வகிக்கிறது.

இந்த இரண்டாவது பகுதியில் அனுபவமும் உள்ளது, அறிவும் உள்ளது.

முதற்பகுதியில் அனுபவமும், அனுபவத்தின் விடுதலையும் இயற்கையாகவே உள்ளன. தோன்றுவதும் மறைவதும் இயற்கையாகவே உள்ளன.

இரண்டாவது பகுதியில் அறிவின் பங்களிப்பு வந்துவிடுகிறது.

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒருவர் மீது நமக்குக் கோபம் ஏற்படுகிறது. கோபம் என்ற அனுபவம் அது ஏற்படும்போது அதன் முதற்பகுதியில் அது ”அறியாக் கோபமாக” உள்ளது.

அது மறைந்த நிலையிலேயே அதன் இரண்டாவது பகுதியான ”அறிந்த கோபம்” உள்ளது.

அறிந்த கோபம் ஏற்பட்ட பிறகுதான் அந்தக் கோபமானது செயலாக மாறுகிறது.

அந்தக் கோபத்துக்குக் காரணமானவர் மீது கோபத்தை வெளிப்படுத்துவது தான் சரியானது என முடிவுசெய்து அந்த நபர் மீது கோபத்தைக் காட்டுகிறோம்.

இப்படி, பயம் , வருத்தம் போன்ற உணர்ச்சிகளைக் கூட தேவைக்கேற்ப புறச் செயல்களுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம். தேவை இல்லை என முடிவு செய்தால் அவற்றை புறச் செயல்களுக்கு பயன்படுத்தாமலும் இருந்துவிடலாம்.

அனுபவங்களின் முதற்பகுதியில் அவைகளுக்கு எந்தச் செயலும் கிடையாது. தோன்றியவை அனைத்தும் தோன்றிய நிலையிலேயே பிரவாகமாகி மறைந்து விடுகின்றன. அங்கு அறிவும் கிடையாது. செயலும் கிடையாது.

அனுபவங்களின் இரண்டாவது பகுதியில்தான் அறிவு செயல்படுகிறது.

அந்த அறிவைக் கொண்டு, நமக்கு ஏற்பட்ட அறிந்த அனுபவங்களை யெல்லாம் புறத் தேவைகளுக்கு பயன்படுத்திக் கொள்கிறோம்.

அப்படி நமக்கு ஏற்பட்டுள்ள பயம், வருத்தம், கோபம் போன்ற உணர்ச்சிகள் புறச்செயல்களுக்கு எந்த வகையிலும் தேவையில்லை

– என்று வைத்துக்கொள்வோம்.

இப்போது நமது செயல்பாடுகள் எவ்வாறு இருக்கும்?

நமது மன அனுபவமானது மகிழ்ச்சியானதாக இருக்கும் பட்சத்தில் அதை நமது அறிவு ஏற்றுக் கொள்ளும்.

அந்த மகிழ்ச்சி உணர்வானது புறச் செயல்களுக்கு

பயன்பட்டாலும் சரி, அல்லது பயன்படா விட்டாலும் சரி.

நமது அறிவு அதனை எந்தவித எதிர்ப்பையும் காட்டாது ஏற்றுக்கொள்ளும்.

ஆனால் இந்த அறிவானது, எதிர்மறை உணர்ச்சிகளான பயம், கோபம், வருத்தம் போன்றவை அனுபவங்களாக ஏற்படும்போது அவற்றைச் சுலபமாக ஏற்றுக் கொள்வதில்லை.

அவற்றையெல்லாம் தொந்தரவாகக் கருதி அவற்றிலிருந்து விடுபடவே நமது அறிவு விரும்பும். அதனால் அவற்றை அப்புறப்படுத்தவே போராடிவிடும்.

இந்த அனுபவங்களை எதிர்த்து நாம் இப்படிப் போராடி விடுவதே அந்த அனுபவங்களுக்கு உயிரூட்டி மீண்டும் அவற்றைத் தக்க வைத்து விடுகின்றது.

சீராக ஓடிய ஆற்று நீரில் சுழல் ஏற்பட்டு விடுகின்றது.

சீராக ஓடி மறைந்த மன அனுபவங்களிலும் தடங்கல் ஏற்பட்டு சுழலாக அவை புதுப்பிக்கப்பட்டு விடுகின்றன.

பிரவாகம் தடங்கலாகிவிடுகின்றது.

நமது அறிவானது இவ்வாறு நமது அனுபவங்களோடு போராடுவதுதான் அறியாமையாகும். அது அறியாமையில் இருக்கும் வரை அது அனுபவங்களோடு போராடிக் கொண்டுதான் இருக்கும்.

அது முட்டாள்த்தனமானது என்பதை அந்த அறிவே புரிந்துகொள்ளவேண்டும். அறிவு அப்படிப் புரிந்து கொள்வதையே ஞானம் எனக் கூறுகிறோம்.

அனுபவங்களைப் பொறுத்து, தனக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை அந்த அறிவே புரிந்து கொள்வதன் மூலம் இரண்டாவது பகுதியில் செயல்பட்டு வந்த 'அறிந்த அனுபவமும்' இயற்கையாக, சுதந்திரமாக, விடுதலையாக விடப்பட்டு விடுகிறது.

– அறிவினால் நிர்வாகம் செய்யாமல் விடப்பட்டு விடுகிறது.

அறிவினால் நிர்வாகம் செய்யப்படாத அனுபவங்கள் அனைத்தும்

அறிவற்ற அனுபவங்களாகிவிடுகின்றன.

– அறியா அனுபவங்களாகி விடுகின்றன.

அறியா அனுபவமும், விடுதலையும் வேறு வேறு அல்ல.

அறியா அனுபவமும், பிரவாகமும் வேறு வேறு அல்ல.

அனுபவங்கள் எவற்றையும் அறிவு சுமக்காத போது

அவை அறியா அனுபவங்களாகி பிரவகித்து விடுகின்றன.

பிரவாகத்தில் ஏற்பட்ட செயற்கையான தடங்கலும் நீங்கிவிடுகிறது.

"அகத்தைப் பொறுத்து நமக்கு – அறிவுக்கு, எந்த வேலையும் கிடையாது" – என்ற ஞானமே

அனைத்துத் தீர்வுகளையும் கொண்டுவருகின்றது.

அனுபவங்களின் முதற் பகுதியைப் பொறுத்த அளவில் அனைத்தும் தாமாகவே நிகழ்ந்திடுகின்றன.

தோற்றமும், மறைவும் தாமாகவே நிகழ்ந்திடுகின்றன.

அங்கு ஞானத்தின் அவசியம் இல்லாத நிலையில் விடுதலை என்னும் பிரவாகம் தாமாகவே நிகழ்ந்து வருகிறது.

அனுபவங்களின் இரண்டாம் பகுதியான "அறிந்த அனுபவங்கள்" என்னும் பகுதியில் தாம்

ஞானமும் தேவைப்படுகிறது; விடுதலையும் தேவைப்படுகிறது.

அனுபவங்களைப் பொறுத்து அவற்றைப் புறத் தேவைகளுக்கு வேண்டுமென்றால் எடுத்துக்கொள்வதும்,

புறத் தேவைகளுக்குத் தேவை இல்லையென்றால்

அனுபவங்களை அவற்றின் போக்கில் விட்டு விடுவதும்

நம் அறிவின் கடமையாக உள்ளது.

நமக்கு ஏற்படும் அக அனுபவங்களை புறச் செயல்களுக்குப் பயன்படுத்துவது

செயல்முறை ஞானமாகும்.

புறச் செயல்களுக்குப் பயன்படாத அக அனுபவங்கள் எவற்றையும் அவற்றினளவில் சீரமைக்கத் தேவையில்லையென

கருத்தளவில் புரிந்துகொள்வதுதான் மெய்ஞானமாகும்.

நமது அக உணர்வுகளைச் சீரமைக்க நம்மையறியாமல் தலைப்பட்டால் அதில் தவறேதும் இல்லை.

நாமாக முடிவு செய்து அகத்தைச் சீரமைக்க முயல்வதுதான் தவறு.

நம்மையறியாமல் நிகழ்ந்தவற்றுக்கு நாம் பொறுப்பல்ல.

தெரிந்த பிறகு அத்தகைய முயற்சிகளிலிருந்து விலகிக் கொண்டால் போதுமானதாகும்.

நமது அக அனுபவங்களையெல்லாம் பிரவாகத்தில் விட்டுவிட வேண்டும் என்று முடிவெடுப்பது கூட அகத்தைச் சீரமைக்க முயல்வதேயாகும்.

அகத்தைப் பொறுத்த அளவில் நமக்கு எந்த வேலையும் கிடையாது என்று நாம் புரிந்துகொள்வது ஒன்று மட்டுமே போதும்.

அனுபவங்களின் முதற்பகுதிக்குப் பிரவாகம் தேவையில்லை.

ஏனெனில் அது இயற்கையாகவே அங்கு பிரவாகமாகவேதான் இருக்கிறது.

அனுபவங்களின் இரண்டாம் பகுதியான அறிந்த பகுதியில் தான் பிரவாகம் தேவைப்படுகிறது.

ஆனால் அங்கும் கூட பிரவாகத்தை முயன்று கொண்டு வரத் தேவையில்லை.

அக உணர்ச்சிகளைச் சீரமைக்கத் தேவையில்லை என்பதைப் புரிந்துகொள்ளும் வேலை மட்டும் அகத்தில் உள்ளது. ★



**V.A.P. சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

**கேள்வி :** நான் கடந்த 20 ஆண்டு காலமாக ஆன்மிகத்தில் பயணித்துவருகிறேன். இருப்பினும் என் மனதில் அடிக்கடி டென்ஷன் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. சில எண்ணங்கள், உணர்வுகள் எனக்கு பயத்தையும் பீதியையும் ஏற்படுத்துகின்றன. இவை எனக்குப் பிடிக்கவில்லை.

இதனால் என்னால் வெளியில் உலகக் காரியங்களில் சரியாகவே செயல்பட முடியவில்லை. மனதை அமைதிப்படுத்துவதற்கு எல்லா முயற்சிகளையும் செய்து சலித்துவிட்டேன். மனதில் அமைதியும் நிறைவும் ஏற்படவே இல்லை. மனதின் இயக்கத்தை என்னால் முழுவதுமாக அறிந்துகொள்ள முடியுமா? உடலிலும் தேவையற்ற நடுக்கம், பதட்டம், படபடப்பு என இப்படி ஏதோ ஒன்று இருந்து கொண்டே இருக்கிறது. உலக விஷயம் பற்றி கேள்விப்படும் செய்திகள் என்னை மிகவும் அச்சுறுத்துகின்றன. எதிர்காலம் பற்றிய பயத்தை ஏற்படுத்துகின்றன. நம் கட்டுப்பாட்டில் எதுவுமே இல்லையா? நிம்மதியான வாழ்விற்கு ஏதாவது ஒரு வழி காட்டுங்கள்.

**பதில் :** மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளில் நாம் எதையோ ஒன்றை பற்றிப் பிடித்துக் கொண்டு போராடுவதே அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மூல காரணம். நாமாக பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கிற போராட்டத்திலிருந்து விடுபடுவதே விடுதலை.

மனதில் பிடித்திருக்கும் பிடியிலிருந்து விடுபட வேண்டும் என்பதுதான் மிகவும் முக்கியம். நாம் பற்றிப் பிடித்திருக்கும் பிடியில் இருந்து விடுபட்டு வேறு ஒன்றை அடைவதை குறிப்பிடவில்லை. மனதின் வழியாக நாம் அடைவதற்கோ அல்லது தக்க வைத்துக் கொள்ளவோ எதுவும் இல்லை, எதையும் அடையவும் முடியாது என்பதைத்தான் நாம் மிக முக்கியமாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

மனதின் இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை. அது இயற்கையின் இயக்கம். எண்ணங்கள், உணர்வுகள் தாமாகத் தோன்றி தாமாக மறைபவை. நமக்குக் கட்டுப்பட்டவை அல்ல. அவற்றிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை. உடலின் அக இயக்கம்போல் தாமாக இயங்கும் இயக்கமாகவே இயங்கிக்கொண்டுவருகிறது. தேவையற்ற மனோரீதியான போராட்டமே உடலில் பதட்டத்தையும் படபடப்பையும் ஏற்படுத்துகிறது. வெளி உலகமும் நம் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது அல்ல. அதுவும் அதன் போக்கில் செயல்படுகிறது.

எல்லாமே அதுவாகவே நடக்கிறது என்றால் நமக்கு என்னதான் இங்கு வேலை இருக்கிறது?

நமது அறிவைப் பயன்படுத்தித் தேவையான வெளிச் செயல்களை செய்துகொள்வது ஒன்று மட்டுமே நம் கைவசம் உள்ளது.

உங்கள் கேள்வியில் கூறப்பட்டிருக்கும் அனைத்துமே தாமாகவே நடைபெறும் இயக்கங்கள்தாம். அதில் உங்களுக்கு எந்த வேலையும் இல்லை. அவற்றோடு போராடுவதுதான் அனைத்துப் பிரச்சனைகளுக்கும் காரணம். நமக்கு இருக்கும் ஒரே ஒரு வேலை வெளிச்செயல் செய்யும்போது மட்டும் நமது அறிவை பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

மனதின் இயக்கத்தில் அறிவு குறுக்கிடுவதுதான் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மூல காரணம். அதனால் மனதின் இயக்கத்தில் நமது அறிவுக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இதை ஒரு உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்வோம்.

நாம் ஒரு இரயில் பயணத்தை மேற்கொள்வதாக வைத்துக்கொள்வோம். நம்முடைய பயணத்துக்கு தேவையான உடமைகளை (Luggage) ஒரு மூன்று பைகளில் எடுத்துவைத்துள்ளோம்.

இடது கையில் ஒரு பையும் வலது கையில் மற்றுமொரு பையும் மேலும் பின்புறம் முதுகில் ஒரு பையும் என மூன்றையும் சுமந்துகொண்டு ரயிலில் ஏறிவிடுகிறோம்.

ரயிலில் ஏறிய பிறகும் நாம் மூன்று பைகளையும் கீழே வைக்காமல் சுமந்துகொண்டே ரயில் பயணத்தை மேற்கொள்கின்றோம்.

மூன்று பைகளின் பாரம் நம்மை மிகவும் களைப்படையச் செய்கிறது.

நம்மைக் கண்ட பெரியவர் ஒருவர் நம் மீது உள்ள அக்கறையால் "உனது உடமைகளை கீழே இறக்கி வைத்துவிடுப்பா" என்கிறார்.

நாம் "ரயிலுக்கு எதற்கு சுமை" என்று கூறுகிறோம்.

அவர் "இரயிலுக்கெல்லாம் எந்தச் சுமையும் இல்லையப்பா. நீ கீழே இறக்கி வை" என்கிறார்.

"உடமைகளை பாதுகாப்பதற்காக நானே சுமந்து கொண்டிருக்கின்றேன்" என்கின்றோம்.

அவர் "கீழே இறக்கி வைத்துவிட்டு பார்த்துக் கொள்ளலாமே" என்று கூறுகிறார்.

"ரயிலுக்கு ஏன் வீண் சுமை" என்று மீண்டும் கூறுகின்றோம்.

அப்பொழுதுதான் அவர் ஒரு புதிய விளக்கத்தை கொடுக்கிறார். "நீ எத்தனை கிலோ எடை?" என்கிறார். "எழுபத்தைந்து" என்று நாம் பதில் அளிக்கின்றோம். "உனது மூன்று பைகளின் மொத்த எடை எத்தனை?" என்கிறார். "ஒரு 50 கிலோ வரும்" என்று கூறுகிறோம். "மொத்தமாக 125 கிலோ ஆகிறது அப்படித்தானே" என்கிறார் .

"ஆமாம்" என்று கூறுகின்றோம்.

"உனது உடமைகளை நீ சுமந்து கொண்டு இருந்தாலும் அனைத்தையும் இரயில்தான் சுமந்து கொண்டு செல்கிறது. ரயிலில் கீழே இறக்கி வைத்தாலும் அனைத்தையும் ரயில்தான் சுமந்து கொண்டு செல்கிறது. நீ கீழே இறக்கி வைத்தாலும் வைக்காவிட்டாலும் அதைச் சுமந்து கொண்டு செல்லும் ரயிலுக்கு எந்த பிரச்சனையும் எந்த பாதிப்பும் இல்லை.

ஆனால் கீழே இறக்கி வைக்கும் போது நீ இளைப்பாறலாம். சுமந்து கொண்டிருக்கும்போது நீ மிகவும் வேதனையோடு இருப்பாய் அவ்வளவுதான் வித்தியாசம்" என்றார்.

இங்கு நமது மனம்தான் ரயில். நமது உடமைகளை சுமந்து கொண்டிருக்கும் நாம்தான் நமது அறிவு. உடமைகள்தான் நமது எண்ண உணர்வுகள்.

ரயிலில் ஏறும்போது மட்டும் நமது உடமைகளை சுமந்து கொண்டு சென்றால் போதும். பயணத்தின் தேவையில்லாமல் சுமக்கத் தேவையில்லை. செயல் செய்யும் போது நமது எண்ண உணர்வுகளை, நினைவுகளைப் பயன்படுத்திக் கொண்டால் மட்டும் போதும்.

ரயிலில் ஏறியவுடன் நம்முடைய உடமைகளை கீழே இறக்கி வைத்து விடுவதைப் போல் நமக்கு செயல் எதுவும் தேவை இல்லாத போது நமது எண்ண உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் கீழே இறக்கி வைத்து விடலாம்.

மனம் என்ற இயற்கையான ரயில் இயக்கத்தில் நாம் எதுவும் சுமக்க செய்யத் தேவையில்லை.

## ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டட வேலைகள் நிறைவடைந்துவிட்டன.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

இதுவரை 5 உறுப்பினர்கள் சேர்ந்துள்ளனர். இன்னும் 3 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்படவுள்ளனர்.

இந்த அறையில் தந்தை, தாய், குழந்தைகள் என நான்கு பேர் வசதியாகத் தங்கலாம். தேவைப்பட்டால் இரண்டு அறைகளைக் கூட ஒன்றாக இணைத்துக் கொள்ளலாம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினரில் ஒருவருக்கு சேர்ந்துவிடும்.

ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். அவர்களது உடமைகளையும் அவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

இன்னும் 3 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

**பிப்ரவரி 25 ஆம் தேதி ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர்களோடு திறப்பு விழா நடைபெற உள்ளது.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டித் தொடரட்டும்... அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்...**

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,**

சேலம்-3. **99942 05880, 97891 65555**

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



ஸ்ரீ பகவத் ஐயா மீதும், ஸ்ரீ பகவத் மிஷன் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு நாம் எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டுசெல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும், மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியை ஏற்படுத்தியும், மிகக் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களை வழங்கியும் வருகிறோம்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முழு முயற்சியையும் மேற்கொண்டுவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் மீதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையிலும் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது. அதற்கு உதவியாக

2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது, மற்றும் ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட மிஷனது அனைத்து நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

இதற்கான செலவுகளை, புரவலர்களாக மாதம் ரூபாய் 1000/- வழங்கும் நன்கொடைகளை மட்டுமே வைத்து, எதிர்கொண்டு வருகிறோம். **இருப்பினும் ஒவ்வொரு மாதமும் பற்றாக்குறையாகவே இருந்து வருகிறது. இந்தக் கொரோனா காலத்தில் இந்தப் பற்றாக்குறையின் அளவு சற்றுக் கூடிவிட்டது.**

எனவே வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் ரூபாய் 1000/- வழங்கி உதவ வேண்டுகிறோம்.

ரூ.1000 வழங்கும் வாய்ப்பில்லாதவர்கள், ரூபாய். 500/- (ஐந்நூறு) வழங்கலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் ரூபாய் 500/- வழங்கும்போது, வழங்கும் அன்பர்களுக்கும் அது சிரமமாக இருக்காது. அதே நேரத்தில் அனைவரும் வழங்கும் போது, அதுவே சிறு துளி பெரு வெள்ளமாக அமைந்து நமது பணி சிறக்கப் பேருதவியாக அமையும்.

எனவே தங்களை ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகக் கருதும் அனைவரும், ஏதாவது ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் மாதந்தோறும் குறைந்த பட்சம் ரூ. 500/- வழங்க வேண்டுகிறோம். தனிப்பட்ட நன்கொடைகளையும் வரவேற்கிறோம்.

இது ஸ்ரீபகவத் ஐயாவின் அன்பான வேண்டுகோள்.

இப்படி வழங்கி உதவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும், ஐயாவுடன் தொடர்பு கொள்வதிலும் மற்றும் மிஷன் நிகழ்வுகளில் பங்கேற்பதிலும் முன்னுரிமை பெற்றவர்களாகக் கருதப்படுவார்கள்.

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்.**

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank-ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**
Hdfc bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**
SBI Bank A/C No. 31784345329 IFS Code: SBIN0012772

உங்களின் பங்களிப்பிற்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஜென் கதை

## "செயலை மட்டும் கவனி"

Image credit: istockphoto.com/PeopleImages

இளைஞன் ஒருவன் வசீகரத் தோற்றத்துடன் இருந்து வந்தான். சமையல் கலையிலும் சிறந்து விளங்கினான். ஒரு சமயம் சமையல் செய்யும்போது ஏற்பட்ட தீ விபத்தில் சிக்கிக் கொண்டான். அதனால் அவனது வசீகரமான முகம் தீக்காயத்தினால் தழும்பு ஏற்பட்டு விகாரமாகிவிட்டது. அவனைப் பார்க்கும் நண்பர்கள் பலரும் "உன் முகம் களை இழந்து இருக்கிறது. முன்பு உன்னிடம் இருந்து வந்த அந்தத் தோற்றப்பொலிவு இப்பொழுது இல்லை. பார்ப்பதற்கு விகாரமாக இருக்கிறாய்." என கூறிவந்தனர்.

இப்படி அவனைப் பார்க்கும் பலரும் கூறியதால் அவன் மிகவும் மனம் உடைந்து போனான்.

எங்கு சென்றாலும் மற்றவர்கள் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்று எண்ணத் தொடங்கினான்.

தன்னுடைய வழக்கமான வேலையைக்கூட முன்புபோல் இப்பொழுது அவனால் சரியாகசெய்ய முடியாமல் போனது.

தனக்கான ஒரு வழியைத் தேடி ஓர் ஞானியைச் சந்தித்தான்.

தனக்கு நிகழ்ந்தவை அனைத்தையும் ஞானியிடம் எடுத்துக் கூறித் தீர்வு கேட்டான்.

ஞானி பொறுமையாக உள்வாங்கிவிட்டு "உனக்கு பிரச்சினை உன் முகத்திலா? மனதிலா?" என்று கேட்டார்.

"முகத்தில் தழும்புதான் சுவாமி. ஆனால் பாதிப்பு என்னவோ மனதில்தான் அதிகம்" என்றான்.

"மன பாதிப்புக்கு என்ன காரணம்?" என்றார் ஞானி.

"மற்றவர்கள் என்னைப்பற்றி என்ன நினைப்பார்களோ என்ற சிந்தனை என் மனதை பாதிக்கிறது" என்றான் இளைஞன்.

"நீ அந்த எண்ணத்திற்கு முக்கியத்துவம் அளிக்கத் தேவையில்லை. உன் செயலில் கவனத்தை செலுத்து" என்றார் ஞானி.

இளைஞனுக்கு எவ்வளவு எடுத்துக்கூறியும் புரிந்தபாடில்லை.

பிறகு ஞானி, "நீ எதில் மிகவும் திறமையானவன்?" என்றார்.

"நான் உணவை மிகவும் சுவையாகச் சமைப்பேன். நான் சமையல் கலைஞன்கூட" என்றான் அவன்.

ஞானி, சமையலுக்கு தேவையான பொருட்களை கொடுத்துவிட்டு அவன் அருகிலேயே ஒரு நாற்காலியைப் போட்டு அமர்ந்து கொண்டார்.

"நீ எந்த உணவை மிகவும் சுவையாக சமைப்பாயோ அந்த உணவை சமை. நீ சமைப்பதை நான் பார்க்க வேண்டும். நன்றாக சமையல் செய். பார்க்கலாம்" என்றார்.

இளைஞனுக்கு கையும் ஓடவில்லை காலும் ஓடவில்லை. இருந்தாலும் சமைப்பதற்குத் தேவையான பொருட்களை எடுத்து சமைக்கத் தொடங்கினான். அவனுடைய ஒவ்வொரு செயலுக்கும் அவரை திரும்பத் திரும்ப பார்த்து விட்டு சமைத்துக் கொண்டிருந்தான்.

ஞானி, "சுவை மிகவும் நன்றாக இருக்கட்டும்." என்று கூறினார்.

இளைஞனுக்கு மேலும் பதட்டமும் படபடப்பும் கூடியது. சமையல் முற்றிலுமாக சொதப்பலாகிவிட்டது. சமைத்தது முற்றிலும் சரியில்லாமல் போனது.

ஞானி, "எங்கே எனக்கு கொஞ்சம் கொடு. நான் சுவைத்து பார்க்கிறேன்" என்றார் ஆவலுடன்.

"வேணாம் சுவாமி, எனக்கே என் சமையல் பிடிக்கவில்லை" என்றான் இளைஞன்.

ஞானி அவனை ஒருமுறை உற்று பார்த்துவிட்டு "சரியப்பா எனக்கு ஒரு மணிநேரம் வெளியில் வேலை இருக்கிறது. நான் போய்வருகிறேன். மீண்டும் சமையல் பொருட்களை வைத்து ஏதோ ஒன்று செய்து வை. வந்து சாப்பிடுகிறேன்" என்று கூறிச் சென்றுவிட்டார்.

இளைஞன் இப்பொழுது சமையல் பொருட்களை வைத்து தன்னுடைய வழக்கமான முறையில் முழு ஈடுபாட்டோடு சமைக்கத் தொடங்கினான். மிகவும்

சுவையாக இருந்தது.

ஞானி ஒரு மணி நேரம் கழித்து வந்தார். இவன் சமைத்த உணவை அவருக்கு பரிமாறினான்.

சாப்பிட்டுவிட்டு "மிகவும் அற்புதமான சுவை. நான் இப்படிப்பட்ட சுவையை இதுவரை சுவைத்ததே இல்லை" என்றார்.

இளைஞன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

"இதற்கு முன்பாகவும் நீதான் சமையல் செய்தாய். அப்பொழுது சரியாக வரவில்லை. இப்போதும் நீதான் சமைத்து இருக்கிறாய். மிகவும் சுவையாக இருக்கிறது. அது எப்படி?" என்றார் ஞானி.

"நீங்கள் என் அருகில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது, எனக்கு பதட்டத்தையும் பரபரப்பையும் ஏற்படுத்தியது. அதனால் என்னால் சமையலில் முழு கவனமும் செலுத்த முடியவில்லை சாமி" என்றான்.

இப்போது எப்படி சமைத்தாய்?" என்றார் ஞானி.

"நீங்கள் சென்ற பிறகு நான் என்னுடைய வழக்கப்படி செயல்பட்டேன். எல்லாம் நன்றாகவே வந்திருக்கிறது" என்றான்.

"இப்படித்தானப்பா உன் பிரச்சனையும் இருக்கிறது" என்றார் ஞானி.

"புரியவில்லையே சாமி" என்றான்.

"மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற உனது சிந்தனைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் பொழுது, உன் கவனம் சிதறுகிறது. நமக்கு இருப்பது ஒரே கவனம் தான். அதுமனதின் மீது இருப்பதை விட செயலில் இருப்பதே சரி. மற்றவர்கள் எப்படி நினைப்பார்களோ என்ற எண்ணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து உன் செயல்களை செய்யும்போது அவை சரி இல்லாமல் போய்விடுகின்றன. மற்றவர்கள் உன்னைப் பற்றி கூறும் கருத்துக்களை புறம் தள்ளிவிட்டு உன் முழு கவனத்தையும் செயல் பக்கம் செலுத்தும்போது உன் செயல் சிறப்படைகிறது." என்று விளக்கினார்.

தன்னுடைய தவறை கண்டுணர்ந்து, தான் சமைத்ததை ரசித்து ருசித்தான் இளைஞன்.

## நவீன நீர்வழிச்சாலை கோதாவரி – காவேரி (இ)பிணைப்பு



பொறி ஏ.சி.காமராஜ்
தலைவர் –
நவீன நீர்வழிச்சாலை

இந்தியாவில் போதிய தண்ணீர் இல்லை என்கிற மாயை உள்ளது. ஆனால் உண்மை வேறு. ஆங்கிலேய பொறியாளர் சர். ஆர்தர் காட்டன் கூறியது போல நமக்கு எல்லா பயன்பாட்டிற்கும் போக தேவைக்கு மேல் 10 மடங்கு தண்ணீர் உள்ளது. அதை முறையாக பயன்படுத்துகின்ற மேலாண்மை தான் நம்மிடம் இல்லை. எனவே நதிகள் இணைப்பின் மூலம் இந்த மேலாண்மையை செயல்படுத்தலாம் என்ற நோக்கில் 1982 ஆம் ஆண்டு இந்திரா காந்தி பிரதமராக இருந்த பொழுது " தேசிய நீர்மேம்பாட்டு முகமை (NWDA)" என்கிற அமைப்பை ஏற்படுத்தினார். இவர்கள் கடந்த 35 வருடங்களுக்கு மேலாக நதிகள் இணைப்பிற்கு பல திட்டங்களை கொடுத்து வருகிறார்கள். ஆனால் எந்த ஒரு திட்டமும் இதுவரை செயல்பாட்டுக்கு வந்ததில்லை. ஏனெனில் எந்த மாநிலமும் இவர்களது திட்டத்தை ஏற்கவில்லை. தற்போது அறிவிக்கப்பட்டுள்ள கோதாவரி – காவிரி இணைப்புத் திட்டமும் இவர்கள் தீட்டியதுதான்.

இந்த சூழ்நிலையில் மாநிலங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய, அனைத்து தண்ணீர் பிரச்சனைகளுக்கும் ஒரு நிரந்தரத் தீர்வாய் அமையக்கூடிய திட்டத்தை உருவாக்க வேண்டும் என்கிற ஒரே நோக்கத்துடன் என்னுடைய பொதுப்பணித்துறை பொறியாளர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு 20 ஆண்டு கால ஆய்வின் விளைவாக வடிவமைக்கப்பட்ட திட்டமே கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் எனும் நவீன நீர்வழிச்சாலை. இதை நெடுவழி நீர்த்தேக்கம் என்றும் அழைப்பர். இத்திட்டத்தில் என்னுடன் இணைந்து முன்னாள் தலைமை பொறியாளர்கள், ஐ.ஐ.டி பொறியாளர்கள், வெளிநாடு நீரியில் நிபுணர்கள் என நூற்றுக்கும் மேற்பட்ட வல்லுநர்கள் பணியாற்றி வருகின்றனர்.

### கோதாவரி – காவேரி நவீன நீர்வழிச்சாலைத் திட்டம்

கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலையின் ஒரு அங்கமான கோதாவரி காவேரி நீர்வழிச்சாலை சமதளப்பரப்பில் அமையும் நீளமான நீர்த்தேக்கம் ஆகும். இது இந்திராவதி, வெயின் கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, பெண்ணார், பாலாறு, பொன்னையாறு, காவேரி, வைகை மற்றும் தாமிரபரணி என பல நதிகளையும் பிணைக்கும்.

நவீன நீர்வழிச்சாலை என்பது மின் பிணைப்பு போன்று ஒரு நீர்ப் பிணைப்பை (Water Grid) ஏற்படுத்தும். இந்த நீர்ப்பிணைப்பில் தண்ணீர் இருவழிப்பாதையாகச் செல்லும். இதன் மூலம் எந்த ஒரு நதியில் வெள்ளம் வந்தாலும் அந்த வெள்ள நீர் முழுவதையும் அல்லது தேவையான அளவை

சமதளக் கால்வாயிலேயே தேக்கி, வேண்டிய இடங்களுக்கு, வேண்டிய நேரத்தில் கொடுக்கலாம். அதாவது கோதாவரியில் வெள்ளம் வந்தால் காவிரிக்கு கொடுக்க முடியும். காவிரியில் வெள்ளம் வந்தால் கோதாவரிக்கு கொடுக்க முடியும். இதில் எங்குமே பம்பிங் கிடையாது. உலகிலேயே இது ஒரு புதுமையான திட்டம் எனப் பலராலும் போற்றப்படுகிறது. இது வெள்ளமாக கடும் சேதத்தை ஏற்படுத்திவிட்டு கடலுக்கு செல்லும் வெள்ள நீரை மட்டுமே எடுப்பதால் எல்லா மாநிலங்களும் இத்திட்டத்தை வரவேற்கின்றன. மேலும் தண்ணீர் பங்கீட்டிலும் எந்த பிரச்னையும் வராது. மின் பிணைப்பில் மின்சாரத்தை பகிர்ந்துகொள்வது போல இந்த நீர்ப்பிணைப்பில் தண்ணீர் பகிர்ந்துகொள்ளப்படும். எனவே மாநிலங்கள் இத்திட்டத்தை வரவேற்கின்றன.

நதிகள் இணைப்புத் திட்டத்தில் இது போல செய்ய முடியாது. அதாவது ஒரு ஆற்றிலிருந்து மற்றொரு ஆற்றுக்கு தண்ணீரை திருப்பி விட முடியுமே தவிர மற்றொரு ஆற்றிலிருந்து தண்ணீரை மீண்டும் பெறமுடியாது. ஏனென்றால் நதிகள் இணைப்புத் திட்டத்தில் நீரோட்டம் ஒரு திசையிலியேயே இருக்கும். அதாவது சரிவுடன் மேலிருந்து கீழ் நோக்கி மட்டுமே தண்ணீர் பாயும் .

**கோதாவரி காவேரி நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் வரைபடம்**




இது போன்ற எந்த திட்டத்திலும் இல்லாத சிறப்பம்சங்களை கொண்டதாலேயே 2004 ஆம் ஆண்டு திரு.வாஜ்பாய் அவர்கள் பிரதமராக இருந்தபோது திரு. சுரேஷ் பிரபு தலைமையில் அமைக்கப்பட்ட நதிகள் இணைப்பு செயலாக்க குழு கங்கா-குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டமே நதிகள் இணைப்புக்கு மிகச் சிறந்த மாற்றுத் திட்டம் என அறிவித்தது. அதோடு மத்திய அரசின் நதிகள் இணைப்பு உயர்மட்டக்குழுவிலும் என்னை செயலாளருக்கு இணையான உறுப்பினராக நியமித்தார்கள் . நம் முன்னாள் ஜனாதிபதி டாக்டர் அப்துல் கலாம் அவர்கள் இந்த திட்டத்தை தனது கனவுத் திட்டமாக அறிவித்தார். தற்போதுள்ள மாண்புமிகு மத்திய ஜல் சக்தி அமைச்சர் திரு. கஜேந்திர சிங் சேகாவத் அவர்களும் கங்கா - குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் "நம் நாட்டின் தலையெழுத்தையே மாற்றக்கூடியத் திட்டம்" எனப் புகழ்ந்துள்ளார். உச்ச நீதிமன்றமும் தனது தீர்ப்பினில் நதிகளை இணைக்கும் பொழுது நீர்வழிச்சாலை அமைக்க வேண்டுமென்று மத்திய அரசுக்கு பரிந்துரைத்துள்ளது.

கோதாவரி ஆற்றில் மட்டும் வருடந்தோறும் 3000 டி.எம்.சி. தண்ணீர் கடலுக்கு செல்கிறது. கோதாவரி - காவேரி நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் மூலம் இதில் குறைந்தது 800 டி.எம்.சி எடுத்தாலே, மகாராஷ்டிரா, தெலுங்கானா , ஆந்திரா , தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் ஒவ்வொன்றுக்கும் தேவையான தண்ணீரை 200 டி.எம்.சி வீதம் வழங்க முடியும். இதன் மூலம் இந்த மாநிலங்களுக்கு கீழ்கண்ட பலன்கள் கிடைக்கும் :

- ❄ 2400 கி.மீ நீளத்திற்கு நீர்தேக்கம்
- ❄ 2400 கி.மீ நீர்வழிச்சாலை மற்றும் நெடுஞ்சாலை
- ❄ 12 கோடி மக்களுக்கு தங்கு தடையற்ற குடிநீர்
- ❄ 2.1 கோடி ஏக்கர் நிலங்களுக்கு பாசனம்
- ❄ 3.45 கோடி மக்களுக்கு வேலைவாய்ப்பு
- ❄ 4800 மெகாவாட் நீர்மின்சாரம்
- ❄ நிலத்தடி நீர் உயர்வால் 3420 மெகாவாட் மின்சாரம் மீதம்
- ❄ ஆண்டுக்கு ரூ. 50000 கோடி எண்ணெய் இறக்குமதி செய்வதில் மிச்சம்
- ❄ மீன் உற்பத்தி அதிகரிப்பு
- ❄ சுற்றுசூழல் மற்றும் சுற்றுலா மேம்பாடு

இதில் தமிழகத்திற்கு மட்டும் 900 கி.மீ நெடுவழி நீர்த்தேக்கம், நீர்வழிச்சாலை, நெடுஞ்சாலை, 6 கோடி மக்களுக்கு குடிநீர், கூடுதலாக சுமார் 75 லட்சம் ஏக்கர் நிலதிற்கு பாசன வசதி 1800 மெகாவாட் நீர் மின்சாரம், 150 லட்சம் மக்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும். ஆகவே இத்திட்டத்தை விரைந்து செயல்படுத்த வேண்டும்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் இந்த திட்டத்தின் மீது மிகுந்த ஆர்வமுள்ளவர் . திட்டம் பற்றி விழிப்புணர்வு அனைவருக்கும் ஏற்படவேண்டும் என்பதற்காக சென்னையில் காமராஜ் அரங்கில் இரு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பிரம்மாண்ட கருத்தரங்கை ஏற்பாடு செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது மட்டுமல்ல பாராட்டுதலுக்குமுரியது.

# நிகழ்ச்சி நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555















